# பதிப்புரை

பாப்பான்குளம் டாக்டர். இராமசாமி அவர்கள் இந்த ஓலைச் சுவடிகளை மிகவும் பயபக்தியுடன் என் கையில் கொடுத்தார். திருமூலர் அருளிய புவனைகக்கிஷத்தில் உள்ள இந்த எண் சக்கரங்கள் அப்படியே பலிக்கக் கூடியவை. தீயவர் கையில் அகப்பட்டு யாருக்காவது கெடுதல் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் பிரயோகித்து அவர் தீமை அடைந்தால் அந்தப் பாவம் நமக்கு வந்துசேருமே என்று பயந்தார்.

ஆனால் இதில் உள்ள சக்கரங்கள் அற்புதமான நன்மை பயக்கக்கூடியவை. அவை நல்லவர் கையில் அகப்பட்டு பலபேருக்கு நன்மை உண்டாகச் செய்யட்டுமே என்ற எண்ணம் மேலோங்கவே, 'பரவாயில்லை இதை வெளியிடுங்கள்,' என்று கூறி என் கையில் கொடுத்தார்.

பாப்பான்குளம் டாக்டர். இராமசாமி அவர்கள் பாம்பாட்டிச் சித்தரின் பரம்பரையில் வந்தவர். 23 -வது தலைமுறையைச் சேர்ந்தவர். அவரது பரம்பரையினர் பல தலைமுறைகளாக இந்த சக்கரங்களைப் பயன்படுத்தி அற்புதமான முறையில் பலருக்கு நன்மை செய்துள்ளனர். அதனால் அவருடைய கூற்றை லேசாக எண்ணிவிட முடியாது.

ஓலைச்சுவடியைப் பிரித்துப்படிக்க முயன்றபோது சக்கரங்களில் எண்களை அடைக்க வழி புலப்படவில்லை. பலநாள் இப்படியாக திண்டாடிகொண்டிருந்த சமயத்தில்தான் கடையநல்லூர் சோதிடர் இசக்கி சாமியார் வந்து சேர்ந்தார். அவர் ஓலைச்சுவடியைப் படித்துப் பார்த்துவிட்டு சக்கரங்களை நான் அடைத்துத் தருகிறேன், இதில் உள்ள பல புரியாத விசயங்களுக்கும் விளக்கம் எழுதித்தருகிறேன் என்று கூறி அப்பணியை மேற்கொண்டு மிகக் குறைந்த காலத்தில் எழுதி முடித்துக் கொடுத்தார்.

இந்நூல் வெளியாகத் துணைபுரிந்த இவ்விருவர்களுக்கும் தாமரை நூலகம் மட்டுமல்ல, தமிழகமே கடமைப்பட்டிருக்கிறது. நூலை உங்கள் கையில் சமர்ப்பித்துவிட்டோம். இதன் நற்பலன்கள் எல்லோருக்கும் கிடைக்க வேண்டுமென விரும்புகிறோம்.

இப்படிக்கு
எஸ்.பி. ராமச்சந்திரன்
பதிப்பாசிரியர்

ஓம்

# ஓம் சக்தி சிவமயம்

## முகவுரை

ஓங்காரி என்பாள் அவள் ஒரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை உடையவள்
ஆங்காரி ஆகியே ஐவரைப் பெற்றிட்டு
இரீங்காரத்துள்ளே இனிதிருந்தாளே.

என்று திருமூலர் திருமந்திரம் கூறுகிறது. அஃதாவது ஓங்காரமாகிய பிரணவமே சக்தி சொரூபம் என்றும், பச்சை நிறத்தை உடையவளாகிய; அவளிடமிருந்தே பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய பஞ்சகர்த்தாக்களும், அவர்களுக்கு சக்தி சொரூபிணி களாக பஞ்ச சக்திகளும் தோன்றினர். அவளே பஞ்ச பூதங்களுக்கும் அதிதேவதையாகி இப்பிரபஞ்சங்களை எல்லாம் படைத்து, காத்து, அழித்து அருளி, மறைத்து செயல்ப்டுகின்றனள். இவற்றுக் கெல்லாம் ஆதி காரணப் பொருளாகிய ஓம் என்ற பிரணவ சொரூபியாகிய சக்தி அ+உ+ம்+ விந்து+நாதம் என 5 ஆக பிரிவு பட்டுச் சகல தத்துவார்த்தங்களுக்கும் தாயாகி 16 கலைகளையுடைய சாந்த சொரூபிணி ஆக புவனேஸ்வரியாகிய மாதா அருளுகின்றாள்.

இத்தகைய மேலாம் சக்தியாகிய புவனேஸ்வரியைப் பூசித்து வழிபட்டவர்களுக்கு இஷ்ட சித்தியைக் கொடுக்கும் பொருட்டு திரு நந்தி கேஸ்வரரின் பிரதான சீடராகிய "திருமூலர்" அவர்களின் திருவாக்கால் மலர்ந்த சாத்திரமாவது இந்தப் "புவனை சக்கிஷமாகும்".

மந்திர சாஸ்திரத்தில் மனிதன் தனது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவல்ல வழிமுறைகள் எத்தனையோ இருந்தாலும் இறைவனை எண்ணின் மூலமாகவும் நமது, சித்தர்களும், மகரிஷிகலும், ஞானிகளும் வழிபட்டு வாழ வழிமுறைகளை இவ்வுலகுய்யும் பொருட்டு இயற்றியுள்ளனர்.

இவற்றுள் தலையாயதும் சிறப்புற்று வழங்குவதும் காலத்தால் மிகவும் தொன்மை வாய்ந்ததும் இந்தப் "புவனை கக்கிஷமாகும்".

இந்த கக்கிஷத்தைப் பற்றி அகஸ்திய மகரிஷியால் கூறப்பட்டுள்ள பஞ்ச காவியங்களில் ஒன்றான மாந்திரீக காவியம் 1000ல்

கொள்ளவே இன்ன மொரு மார்க்கங்கேளு
குவலயத்தில் கணித மென்ற மார்க்கமப்பா
தெள்ளமிர்தமான தொரு கக்கிஷந்தான்
தேற்றமுடன் அறிந்தவர்கள் சொல்லக்கூடும்
உள்ளபடி மற்றவர்கள் உரைக்கப் போமோ
ஒருக்காலு முடியாது திண்ணமப்பா
எள்ளளவும் பிசகாது லக்கமாறல்
எளிதான கக்கிஷத்தின் லக்கமாறே.

என்று கூறுகிறார்.

இதிலிருந்து இந்த எண் கணிதப் புவனை லக்க சக்கரங்களைப் பயன்படுத்தி பூஜித்து புவனையை வழி படுபவர்களுக்கு பலன்கள் எள்ளளவும் பிசகாது கோரியது நடக்கும் என்று தெரிகிறது.

இதையே அகஸ்தியர் பரிபூரணம் 1200ல்

உருவேத்திப் புவனையுட சக்கரத்தை
உண்மையுடன் மானிடற்கு கட்டினாக்கால்
கருவொத்து நின்றபல வியாதி எல்லாம்
கண்காணா தோடுமடா கருத்தாய்ப் பாரு
வருவித்த வஞ்சனைகள் பில்லிஏவல்
மகத்தான பிசாசு களும் மதி கெட்டோடும்
திருவுத்த குருவருளால் புவனைதானும்
தீர்க்கமுடன் நினைத்தபடி செய்வாள் பாரே.

பாரப்பா புவனையுட தீர்க்கங்கேளு
பதிவான புவன மெலாம் நிறைந்து நின்று
நேரப்பாநிற்றைந்த பரஞ் சோதியாகி
நிசமான பொருளாகி ஆத்மாவாகி
சாரப்பா ஆத்மாவும் சத்தி சிவமாகி
தன்மையுள்ள ஐம்பூத ஆதாரமாகி
காரப்பா ஐம்பூத ஆதார மொன்றாய்
கண்டுங் காணாமலெங்கும் பிரம்மமாச்சே.

என்றும் கூறப்படுவ்திலிருந்து புவனை சக்கரத்தை பிரயோகம் செய்து வழிபடுகின்றவர்களுக்கு சகலகிரக தோஷம், பில்லி, சூன்யம், ஏவல், மாறுபாடு, செய்வினைக் கோளாறு, நோய், நொடி, பீடை, பேய், பிசாசு முதலியன வெல்லாம் நீங்கப் பெற்று சுகஜீவியாய் வாழ்வர் என்பது தெற்றென விளங்குகிறது.

இதுகாறும் கண்டவற்றுள்ளிருந்து இந்தப் "புவனைக் கக்கிஷ" சாஸ்திரம் கிடைத்தற்கரிய நூலாகையாலும் உயர்திரு மதிப்பிற்குரிய ஐயா தாமரை நூலாக ஆசிரியர் சித்தர் பெருமான் " திரு. எஸ்.பி. ராமச்சந்திரன்" அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க மிகப் பல காலமாக சேகரித்து பாதுகாத்து வைக்கப்பட்டிருந்த இந்த நூலுக்கு உரை செய்துள்ளோம்.

இதில் வசியம், மோகனம், தம்பனம், உச்சாடினம், ஆகிருஷ்ணம், வித்துவேசணம், பேதனம், மாரணம், முதலிய எட்டு கன்மங்களையும் தனித்தனியே தொகுத்து அதனதற்குரிய மந்திரங்களையும் சக்கரம் தரிக்கும் ஜாமம், ஓரை முதலியனவும் தியானிக்க வேண்டிய விதி முறைகளையும், திசையும், பிராணபிரதிஷ்ட மூல மந்திரங்களையும் மூலச் சக்கரங்களையும், எடுத்துத் தொகுத்து "திருமூல நாயனாரின்" திருவடிகளை வணங்கி மூல முழு முதற் கடவுளை தயானித்து உங்கள் முன் சமர்ப்பணம் செய்வதில் பெருமித மடைகிறேன்.

இதில் கூறப்பட்டுள்ள எண்ணியல் சக்கரங்களைப் பூசித்து முறைப்படி தயார் செய்து உடம்பில் அணிந்து கொள்ளவோ அல்லது வீடு, அலுவலகம் போன்றவற்றுள் வைத்து வழிபடவோ செய்தால் சகல கிரகதோஷம், பில்லி, சூனியம், ஏவல், மாறுபாடு செய்வினைக் கோளாறு, மனபயம், திருஷ்டி, முதலியவற்றிலிருந்து நிவாரணம் பெற்றும் சகல ரோக நிவாரணம், விஷகடி, விஷசந்து, மிருகம், துர்த்தேவதை இவற்றினால் ஏற்படும் தொல்லைகளும் நீங்கப் பெற்றும், வியாபார விருத்தி, செல்வச் செழிப்புடன் வாழவும், விரும்பியது நிறைவேறும் படியான பாக்கியமும் உண்டாகும். இத்தனை அருமையான இந்த சாஸ்திரம் புண்ணியவான் களுக்கே கிட்டும்.

**இன்னமும் இந்த புவனைக் கக்கிஷம் 346 பாடல்மூலம்**

உணர்ந்து கொண்டேன் உள் நின்ற சக்தியை
புணர்ந்து கொண்டேன் சிவ புத்தியினாலே
இணங்குகின்றேன் எங்கள் ஈசன்தன்னொடு
வணங்குகின்றேன் நந்தி வாய்த்த வடிவையே. 346.

அடிநீலம் நீரங்கி ஆடிய வாய்வு
முடிநின்ற ஆகாயம் முற்றிய சக்திக்
கிடைநின்ற சக்கரம் வீசு மிலக்கம்
வடி வென்று சொல்லி வகுத்தபடியே. 347.

படி பதினாரரரைப் பற்றிய தேரு
னடி மதியாதித்தனாகு முருளை
வடிவிலி வேதம் வகுத்த புரவி
கடவிய பாகனும் காண் நான்முகனே. 348.

நான்முகன் றாதையும் நாடாத சத்தியை
வான் முகம் நாடி வகுத்த விச்சக்கரம்
ஊன்முகம் நாடி உதித்தெழுமூலத்தைப்
பானமுதாகப் பரந்தெழு மெட்டிலே. 349.

என்று சத்தியாகிய புவனேஸ்வரி தேவியை வியந்து பாடியிருக்கின்றார்.

எனவே மேலாம் பரம்பொருளாகிய ஜோதி ஸ்வரூபிணியாகிய புவனேஸ்வரியைத் தியானித்து இந்தக் கக்கிஷத்தைப் படித்து நிறை நோக்கிக் குறை நீக்கி சகல இகபர நலன்களையும் அனுபவ வாயிலாய் உய்த்து உணர்ந்து இறையாகிய என்னம்மையின் அருளால் இனிது வாழ்வாங்கு வாழ வாழ்த்தி வணங்குகின்றேன்.

சுபமஸ்து.

இங்ஙனம் :

ஞான யோகி – ப. இசக்கி சாமியார், D.I.S.M.
மணிமந்திர வைத்திய ஜோதிடம்,
25பி/1– புலவர் தெரு, கிருஷ்ணாபுரம்,
கடையநல்லூர் – 627759.
நெல்லை மாவட்டம்.

ஓம்

## புவனை கக்கிஷம் அடைக்கும் விபரம் :-

16 அறையிலே நடு நாலு அறை உண்டு. அதிலே புவனை பீசமும் சுவத்திகங் கலப்பையும் எழுதிக் கொள்ளவும். 16 அறையும் சத்தியக்கரம் கன்மத்துக் கேத்த பீசாக்கரம் துருவத்திலும், அத்துருவத்திலும் எழுதிக் கொள்ளவும். கன்மங்களுக்குச் சொன்ன மாலா மந்திரங்களைப் 16 அறையிலும் விரவி எழுதிக் கொள்ளவும்: இதுகள் எழுதின பிறகு துருவம் 8 அறையிலும் சகலமான அக்கரத்தையும் இறீங்காரத்தாலே அக்கரைவளைத்து கட்டவும். அத்துருவம் எட்டிலும் சகலமான அக்கரத் தையும் சிரீங்காரத்தாலே அக்கரை வளைத்து கட்டவும். கட்டின பிறகு சக்கரத்துக்கு ரேகைத் தலைகள் தோறும் சூலமிட்டுச் சூலம் பிரணவத்தாலே வளைத்துக் கட்டி அதன் பிறகு சக்கரம் பதினாறையும் நாலாம் சிறீங்காரத்தாலே வளைத்துக் கட்டவும். வளைத்துக் கட்டின சூல யிடைவெளி 16லும் சோடசகலை பதினாறும் எழுதி யதிலே சுற்றிலும் பேருங் கன்மமும் எழுதவும். சிறீங்காரத்தின் மேலே நடுமத்தியிலே சிரீங்கார மெழுதிப் பிறகு தாழ இருபக்கத்திலும் சத்தி பீசம் எழுதவும். இவையெல்லாம் சத்தி பீசத்தினாலே வளைத்துக் கட்டவும். கட்டின பக்கமிரண்டிலும் மய்யத்திலும் சந்திர சூரியாள் பீச மெழுதவும். இதைச் சூளப் பிரணவத்தாலே வளைத்துக் கட்டவும் இதன் மேலொரு வட்ட மெழுதிப் பிரணவத்துக்கும் வட்டத்துக்கும் நடு வெளியிலே தேவாதி தலங்கள் சொன்னபடியே வழுவாமல் சாமானிய மந்திரம் சூழ எழுதவும். வட்டத்துக்கு மேலே இரண்டு பக்கமும் ஆணி பீசாட்சர மெழுதிக் கொள்ளவும்.

### சத்தி நிறுத்து மந்திரம் :-

ஓம் இறீயும் இயந்திரப் பிறாணாய வரப்பிராணாய சாபந்தீர சிறுதந்துந் திளராது துக்கா. ரா. நீ. துக்கா ராத. என்று சத்தி நிறுத்தவும்.



சுபமஸ்து.

ஓம்

# ஓம் சக்தி சிவமயம்

1. புவனைக் கக்கிஷத்துக்கு முதல் பீசாட்சரம் :-

அல - த - யாவன.

ஹ்ரம். ஹ்ம். ஐம். ஹ்ரம்.

சத்தி பீசம் - ஹ்ரீம்.

லட்சுமி பீசம் - ஸ்ரீம்.

மன்மத பீசம் - க்லீம்.

சங்கநிதி பீசம் - ஶம்.

பற்பநிதி பீசம் - பம்

பாசம் - ஆஹ்ரம்.

அங்குசம் - க்ரோம்.

அசபை - ஹம். 2.

துருவம் எட்டிலெழுதுகிறது.

ஓம் நமோ நாராயணாய

அத்துருவம் எட்டிலெழுதுகிறது.

ஓம் நமோ நாராயணாய 3.

சத்தி அக்கரம் 16க்கு துருவம் எட்டில் எழுதுகிறது.

வசியத்துக்கு - ஓம்.

மோகனத்துக்கு - க்லீம்.

வித்துவேசணத்துக்கு - பம்.

ஆகிருஷணத்துக்கு - ஹ்ரீம்.

உச்சாடினத்துக்கு - ஸ்ரீம்.

தம்பனத்துக்கு - ஜும். ஸ. ஹம்.

பேதனத்துக்கு - ஓம்.

மாரணத்துக்கு - ஹ்ரீம்.

ஆக உள்த்துருவம் 8ம் சரி. 4

## அத்துருவம் எட்டிலெழுதுகிறது

வசியத்துக்கு — ஸும்
மோகனத்துக்கு — க்லீம்
வித்துவேசணத்துக்கு — ஹம். ஹ்ரூம்
உச்சாடினத்துக்கு — கம். காம்
ஆகிருஷணத்துக்கு — தம். தாம்.
தம்பனத்துக்கு — லம். லாம்
பேதனத்துக்கு — யம். யாம்.
மாரணத்துக்கு — ரீம். ரீம்
ஆக சத்தியக்கரம் 16 அத்துருவம் 8ம் சரீ. 5

## தும்புரு பீசம் எட்டாவன



ஹ்ரூ. ஜம். க்ஷம். ஓம். யம். ஸம். ஹ்ஸம். ஸா 8
ஆகந் துரு வம் 8ல் எழுதுகிறது.
ஆகத் துருவம் 8ல் எழுதுகிறது. 6.

## ஏகாட்சரம் :-



சிந்தாமணி பீசமாகிய ஏகாட்சரம்
8ம் அத்துருவம் 8ல் எழுதுகிறது. 7.

## சுவத்திகங் கலப்பை யிரண்டாவன.



நல்ல கருமத்துக்கு — கெட்ட கருமத்துக்கு 8.

## திக்கு தேவதை பீசாட்சரமாவன.

ஆதித்தி பீசம்

சந்திரன் பீசம்

கணபதி

கந்தன்

வயீரவன்

துர்க்கை 9.

## கன்னியர் எட்டாவன :-

பிராமணி — வராகி

மயேசுவரி — இந்திராணி

கவுமாரி — சாமுண்டி

வயிட்டுணுவி — மகாலட்சுமி

ஆக 8ம் சரீ. 10.

## திக்குப்பாலகர் எட்டாவன : -

இந்திரன் —

அக்கினி —

இயமன் —

நிருதி —

வருணன் —

வாய்வு —

குபேரன் —

ஈசானன் —

ஆக திக்குபாலகர் 8ம் சரீ. 11

## அட்டகெசம் எட்டாவன :

அயிராபதம் - ஔம் புண்டரீகம் - பூம்
வாமனம் - வாம் குமதன் - க்ரூம்
அஞ்சனன் - சம் புற்பகெந்தன் - பூம்
சாருவபூமன் - ஊம் சுப்ரதீபன் - ஸ்வாம் 12.

ஆக கெசம் 8ம் சரீ.

## அட்ட நாகம் 8 ஆவன.

அனந்தன் - சம் வாசுகி - வாம்
ததகன் - தம் காற் கொடன் - காம்
உக்கிரமன் - உம் பற்பன் - பம்
பரசன் - பாம் குளிகன் - பிரம் 13.

ஆக நாகம் 8ம் சரீ.

## யோனி எட்டாவன :-

கொடி - சலம் எருது - ஊம்
பூனை - பூம் கழுதை - ஹ்ரம்
சிங்கம் - ஸிம் யானை - யம்
நாய் - நாம் காகம் - காம் 14.

ஆக் யோனி 8ம் சரீ.

## பஞ்ச பட்சியாவன :-

அ வல்லூறு - ஸம்
இ ஆந்தை - ஹம்
உ காகம் - உம்
எ கோழி - ஊம்
ஒ மயில் - ஓம் 15

ஆக பட்சி 5ம் சரீ.

## நவக்ரகம் :-

ஆதித்தன் – ஹ்ரூம் | சந்திரன் –
செவ்வாய் – | புதன் – பொம்
வியாழன் – | சுக்கிரன் –
சனீ – | ராகு –

கேது – கொம்

ஆக கிரகம் 9ம் சரீ. 16.

## உமை எட்டாவன :-

உமை – உம் | திரு – ஸ்ரீம்
சாரதி – | பூமி –
குரு – | கேந்திரன் – கொம்
நான்முகன் – | கெருடன் –

ஆக உமை 8ம் சரீ. 17.

## இராசி பன்னிரெண்டாவன :-

மேஷம் – | விருட்சிகம் –
ரிஷபம் – | தனுசு –
மிதுனம் – | மகரம் –
கற்கடகம் – | கும்பம் –
சிங்கம் – | மீனம் –
கன்னி – | துலாம் –

ஆக இராசி 12ம் சரீ. 18.

## நட்சத்திரம் 27 ஆவன :-

அசுபதி – | விசாகம் –
பரணி – | அனுசம் –
கார்த்திகை – | கேட்டை – கொம்
உரோகிணி – ரோம் | மூலம் –
மிருகசீரிடம் – | பூராடம் –

ஆம் திருவாதிரை — திം
ஹிம் புனபூசம் — [illegible]
பும் பூசம் — [illegible]
ஆஷ் ஆயில்யம் — [illegible]
மம் மகம் — [illegible]
பும் பூரம் — [illegible]
உம் உத்திரம் — உം
ஹும் ஹஸ்தம் — [illegible]
சிம் சித்திரை — [illegible]
ஸ்வாம் ஸ்வாதி — [illegible]

உத்திராடம் — [illegible] உம்
திருவோணம் — திം திரம்
அவிட்டம் — [illegible] தம்
சதயம் — [illegible] சம்
பூரட்டாதி — [illegible] நம்
உத்திரட்டாதி — உം உம்
ரேவதி — [illegible] ரேம்

ஆக நட்சத்திரம் 27ம் சரீ. 19.

திதி 15 ஆவன :-

பிரதமை — [illegible]
துதியை — [illegible]
திருதியை — திം
சதுர்த்தி — [illegible]
பஞ்சமி — [illegible]
சஷ்டி — [illegible]
சப்தமி — [illegible]
அஸ்டமி — [illegible]
நவமி — [illegible]
தசமி — [illegible]
ஏகாதசி — [illegible]
துவாதசி — [illegible]
திரயோதசி — [illegible]
சதுர்த்தசி — [illegible]
பௌ — [illegible]

ஆக திதி 15ம் சரீ. 20.

நட்சத்திரம் எழுதுகிற இடம் அறியும் படி :-

மேசத்தில். — அ. ப — கிழக்கு
ரிஷபத்தில் — கா. ரோ. மி — தென்கிழக்கு
மிதுனத்தில் — தி. பு — தெற்கு
கற்கடத்தில் — பூ. ஆ
சிங்கத்தில் — ம. பு — தென்மேற்கு
கன்னியில் — உ. அ. சி

துலாத்தில் – சு. வி — மேற்கு
விருச்சிகத்தில் – அ. கே — மேற்கு
தனுசில் – மூ. பூ — வடமேற்கு
மகரத்தில் – உ. தி. அ — வடகிழக்கு
கும்பத்தில் – ச. பூ — வடக்கு
மீனத்தில் – உத். ரேவதி — ~~தென்மேற்கு~~ தென்கிழக்கு

ஆக விபரம் சரீ. — வடமேற்கு 21.

ஆணி பீசாட்சர மாவன : –

ஆக பீசாட்சர விபரம் சரீ. 22

1, உமை – ஹ்ரீம் | அ – சிரசு
2, திரு – ஸ்ரீம் | ஆ – நெற்றி
3, வாணி – ஐம் | இ – வலக்கண்
4, பூமி – லம் | ஈ – இடக்கண்
5, ஞானகுரு – ஓம் | உ – வலக்காது
6, க்ஷேத்திரன் – க்ஷ்ரௌம் | ஊ – இடக்காது
7, [illegible] – ப்ரூம் | ரு – வலமூக்கு
8, கருடன் – க்ஷிப் | ரூ – இடமூக்கு

உ

ஓம்சக்தி சிவமயம்

# ஸ்ரீ புவனை சக்கிஷம்

எந்திரம் வரைய

முடித்த பின் மந்திரம் மூலமதாகும்
அடுத்த விலக்கமு மக்கரந்தானும்
அடுத்திடும் வீசமறை பதினாறும்
யெடுக்குங் கருமம் இனிச் சொல்லுவோமே. 1.

சொல்லும் திசையும் துணைக் காவல் தெய்வங்கள்
நல்லதோர் வீசமும் நாடும் யிலக்கமுஞ்
சொல்லுங் கிரிகயும் சூலமந்திரங்களும்
வல்லவரித்தை வாழ்த்துவர் தாமே. 2.

வாழ்த்து மிதனை வகுத்தபின் மந்திரம்
பார்த்திடு மெட்டுக் கருமம் பகர்ந்ததும்
ஏய்த்திடு தெய்வமும் எண்ணிய நூல்களும்
கூத்தனுரைத்தது கூறுகிறேனே. 3.

கூறுகிறேனறை கீறுங்குறியது
தேறுகிற நேர் தெரிபதி னாரறை
கீறுகிறேனைந்து கீற்றது
கூறுகிறேனது கொண்டதுதானே. 4.

கொண்டது கீற்றைந்தும் குறிய கீற்றைந்தும்
விண்டதொவ்வொன்றுக் கொவ்வொன்று விஞ்சாமல்
கண்டதாங் கூத்தன் கலையென்று ரைத்தது
எண்டிசைகர்மத் திடும் பெயர் தானே. 5.

இடும் பேர் வசீகரம் மோகனம் தம்பனம்
மடும் பேருச்சாடின மாகரு ஷணையதாம்
படும் பேர் வித்தேடணை பேதன மாரணத்
தொடும் பேர்கன்மாதிகள் சொல்லிய வெட்டே 6.

சொல்லிய வெட்டுக்குத் தோன்றும் துருவமும்
நல்லவரை யெட்டும் நாடும் விலக்கமும்
வல்ல பதினாறறை முதல் நாலினிற்
சொல்லும் ப.க.வ.த தோன்றலிடுவதே. 7.

இட்ட பதினாறில் எட்டாந் துருவமும்
பட்டவிலக்கம் பதித்திடு மெட்டினிற்
றொட்டதுருவம் துடர்ந் தொன்றோ
றெட்டொத்த கட்டு மடைவுக் காரணமாமே. 8.

காரணம் வசியம் காண்பது மோகனம்
காரணம் தம்பனம் தாங்கும் உச்சாடினம்
காரணமாகுங் கருணை வித்தேடணை
மாரணம் பேதனம் மரணமருதியே. 9.

அறிகின்ற வக்கரஞ் சக்கரந் தன்னைக்
குறிகொண்டிருந்திடுங் கொல்வனைதானு
முறுகின்ற வீசத் தோடுற்ற விலக்கத்
துறுகின்ற சூத்திரஞ் சொல்வரை பாரே. 10.

**கக்கிஷ அட்டவணை முற்றிற்று.**

## வசியத் துருவம்

விரை. பார். கிரி. தீர். திரு. கீர் .
பரி. வார். உரையாய் வசியத் தோதுந்துருவம். 1.

பிரி. வீர். தரு. கார். கரு. தார். விரை. பீர்
சொருகாமல் லெக்கத்தை தோன்ற வைப்பீரே. 2.

## மோகனம்

பீர். விரை. தார். கரி. கார். தரு. வீர். பிரி.

ஏர்தரு மோகனத் தெய்தாயதுரு வமாம். 3.

வார். பரு. கீர். திரை. தீர். கிரி. பார். வரை பேர்
பெற்ற லக்கம்பெருகத் தருவதே. 4.

## தம்பனம்

தரு. கார். பிரி. வீர். விரை. பீர். கரு. தார். சொருகீர்
வரு தம்பனத் துருவமாம். 5.

கிரி. தீர். விரை. பார். பரி. வார். திரி. கீர்
நிறையா மிலக்கத்தை நேரதாய்க்கீறே. 6.

## உச்சாடினம்

கீர். திரை. வார். பரி. பார். விரை. தீர். கிரி
மோது முச்சாடினத் துகந்த துருவமாம். 7.

தார். கரி. பீர். விரை. வீர். பிரி. கார். தருவோதும்
இலக்கமுடனுச்சாடின மாடுமே. 8.

## ஆகிருஷ்ணம்

கரு. தார். விரை. பீர். பிரி. வீர். தரு. கார் தெரியா
கிருஷ்ணச் சேரும் துருவமாம். 9.

திரி. கீர். பரி. வார். விரை. பார். கிரி. தீர்
மருவாமிலக்கம் வகுத்துரைப் பீரே. 10.

## வித்துவேசணம்

தீர். கிரி. பார். விரை. வார். பரி. கீர். திரி ஊரும்
வித்துவேசணத் துருவமாம். 11.

கார். தரு. வீர். பிரி. பீர். விரை. தார். கரீ
சீர்பெத்த லக்கத்தை சேர்ப்பதுக் கீரே. 12.

## பேதனத்துருவம்

பரி. வார். திரு. கீர். கிரி. தீர். விரை. பார். பெரியோர்
துருவத்தை பேதன மென்பார். 13.

விரை. பீர். கரு. தார். தரு. கார். பிரி. வீர்
அரிதாகு மிலக்க மறிந்திடுவீரே. 14.

மாரணம்

வீர். பிரி. கார். தரு. தார். கரி. பீர். விரி
மாரண லக்கம் வகுத்த துருவமாம். 15.

பார். வரை. தீர். கிரி. கீர். திரை. வார். பரி
சேருமிலக்கம் தெரிந்து பரிவு றே. 16.

பரிவுற யெட்டுத் துருவம் பதித்துக்
கருவுரு மெட்டிற் கருமத் திலக்கம். 17.

நிறையுறப் பாதி செய்த தொவ் வொன்று நீக்கும்
மரிய அன்பத் தோரெழுத்தாதி அகாரமே. 18.

அகாரமாமொன்றில் இகாரமாமிரண்டில்
உகாரமாமூன்றில் ஐ காரமாம் நாலில். 19.

ஸீகாரமாமஞ்சில் ளை காரமாம் மாறில்
ஓகாரமா மேழில் மொழிந்த அம் மெட்டே. 20.

எட்டு லக்கவரை ஆமுத லவ்வீரு
கட்டுங்கலைபதினாறும் கருத்தொக்க
ஒட்டுந்துருவத் தொரு நாலுங் கவ்விட்டு
நட்டும் சகாரம் நாலும் லக்கமே. 21.

இலக்கத்துடர் நால் ட காரம் த.நாலும்
நலக்குந் துருவம் க்ஷ கார முகாரமுதலெட்டும்
விலக்கமெட்டில் ரகாரயகார ஶ காரமுதல்
பலக்கும் வ. நாலும். நகார மறுதியே. 22.

அறியதுருவம் அத்துருவமுதல்
தெரிவது நகாரமோடறு தியாய்
பிறிதி மிதி அம்முதல் பேசும் சவ்வீறாய்
அறிவ தெழுத் தன்பத் தொன்று மங்களதே. 23.

ஆனது நுவ்வுங் ககார விருத்தியில்
லானது ஞவ்வுஞ் சகார விருத்தியில்
ஆனது ணவ்வும் டகார விருத்தியில்
போனதன் மூன்றும் போலெழுத் தாயே. 24.

ஆதியாய் நின்ற வரையி லக்கத்தைச்
சாதியாய் நின்ற தோர் சத்தியால் சூழ்ந்திட்டு
ஏதமாய் நின்ற எழுத்துக்களெல்லாம்
வேதமாய் நின்ற தோர் விந்து கொடுப்பதே. 25.

கொடுப்பதறை நடுக்கோண மாறாக
எடுத்தவிக் கோணம் நடுக்கிலீ என்று
யெடுத்தகிலீயைக்ஸ்ரீங்காரங் கட்டிக்
கடுத் தறு கோணங்கள் காமவீசமிடே– கீலீம். 26.

இடுவது துருவத்து . ஹ. என்று சொல்லி
இடுவது லக்கத்து . ஹரி. என்றிசைய
இடுவதுதசபைத் துருவத்து நிற்க – ௬,0.
இடுவது. ஹ. என்று லக்கத்திலிட்டே. 27.

எட்டுத் துருவத்திசை சங்க பற்பமும். – ஸம். பம்
பட்டவிலக்கத்தில் பாசாங்குசங்களும் – ஹம். க்ஷம்.
நட்டநடுவரை நாலும் புவனையாம் ஸ்ரீம். ஹ்ரீம். ஹ்ரீம். க்ஷ்ரீம்.
கட்டுங்கலப்பை சுவத்திகமாகுமே. – சும். காம 28.

ஆகுமறையெலா மக்கர சக்கரம் – ஸீம்
போகும் துருவத்து தும்புரு வீசங்கள் – தூம்.
ஏகுமிலக்கதிசைந்த சிந்தாமணி – ஸீம்.
பாகமுட சத்தியெண் சதஸ்டடியாய் நிற்குமே. 29.

நிற்கு மிலக்கம் நடுவைச் சுற்றெழுத்திட்டு
நிற்கும் வலந்தானேர் பெற்றிடத்தரி
நிற்கும் துருவத்தை நீ கட்டி வஹ்ரீங்காரம்
நிற்கு மிலக்கஞ் ஸ்ரீயென்று கட்டே. 30.

கட்டு வதன் முன் கருமத்தான் மந்திரம்
இட்டபின் சித்திரத் தேரென்றே யிடுமறை
யிட்டே இரேகைத் தலைதோறுஞ் சூலமாம்
யொட்டிய சத்தியிட்டொவ்வாலே சூள்வதே. 31.

சூழ்ந்த யிடைவெளி சோடச கலை நிற்கும்
சூழ்ந்த பெயருங் கருமமும் சுத்திடும்
சூழ்ந்திட் டொவ்வாப்பு மேலச் சிறீயென்று
தாழ்ந்திரு பக்கமும் சத்தியை வைப்பதே. 32.

வைத்தபின் இதை வளைப்பது சக்தியால்
ஒத்த வியந்திரமெல்லா முடலாகப்
பத்தி படக்கட்டிப் பக்க மிரண்டிலும்
சித்திரத் தோடு மதி ரவி. சேருமே.- ഷം. ഹ്രീം. 33.

சேரும் பிரணவமே யந்திரத்தைச் சூளப்
பேரு மிதன்மேல்ப் பெரியதோர் வட்டமே
ஆரவிண்டும் பிரணவத்திடை வெளி
சேருந் தேவாதி தலங்க ளுரைப்பதே. 34.

உரைத்த பிராமணி. யோதும் மயேஸ்பரி - ഉമം. ഭം
வரைத்த கௌமாரி வந்த விஷ்ட்ணுவி - கௌ0. ചൈം.
இரைத்த வராகி இசைந்த யிந்திராணி - ഫം..ശ്രീവ
வுரைத்திடுஞ் சாமுண்டி மகாலட்சுமியே.- ഥാം.ലം 35.

இலக்கிய விந்திரன் அக்கினியியல் பெரு எமனும்- -യം. വം. ടം.
வலக்குநிருதி வருணனும் வாய்வும் - ഫിം. വം. യം.
சிலைக்குப் பொன்யீசன் சேருங் கணபதி - സം, ഗം.
தொலைக்கின்ற கந்தன் வயிரவன் துர்க்கையே. 36. - ഷം. വൈം.

துற்ற யிராபதஞ் சோர் புண்டறீகனும் - ഔം, ഉം,
அற்புத வாமன் குமுத னோடஞ்சனன் - വാം. ക്ഷം. ഭ
சற்புற்ப கெந்தனும் சாருவ பூமனும் - ഷേം. സ്ഥം.
சொற்பட்ட சுப்பிரதீபன் சொல்லாணையே. [illegible] 37.

ஆன வனந்தன் அறி வாசுகி தக்கன்
ஊனமிலக்கார் கொடன் உக்கிர மாபற்பன்
கோனமாபாசன குளிகனெண்ணாக
மாதுன யோனி அறியுங் கொடியதே. 38.

கொடி பூனை சிங்கம் நாய் கொண்ட எருது
மடி கழுதை யானை மாபெருங்காகமுஞ்
சுடர்சோமன் செவ்வாய் துலங்கு புதனும்
வெடி குரு வெள்ளி சனி றாகு கேதுவே. 39.

கேதுடனான தோர் கோகுட னிராசியும்
மேட மெருது மிதுனங் கடகமும்
காதிய சிங்கமுங் கன்னி துலாம் தேள் விலக்
கோதில மகரங் குடத்தொடு மீனமே. 40.

மீனென்றுரைக்கும் நாள் மிக்கிருபத்தேழும்
தானுமைதிருச் சாரதி பூமியும்
ஞானக்குருவொடு கேந்திரன் நான்முகன்
வானைப் பொருந்தும் கெருடனும் வல்லூறே. 41.

வல்லூறு ஆந்தை கொடி கோழி மா மயில்
பல்லோ ரறியப் பஞ்ச பச்சியானது
சொல்லாயின் தேவர்சூழும் பெருந்திக்கு
வல்லோர் வகுத்த வழியுரைப் பேனே. 42.

உரைப்பாய் திக்கு பாலர் கன்னியர் நாகம்
பருத்த பாம்பி யோனி பகரும் கோள் தானும்
பொருத்த முறப் பூருவந் தொட்டடைவே
தரிப்ப அவர்கடம் வீசங்கள் தானே. 43.

தான்கிடா எருது தனியே கிழக்கங்கி
தேனமிதுனத் தொடு தெக்கறி கடகம்
வானகன்னி தென் மேற்கு வைத்து வருணன் மேற்கு
ஊனை கண்ட தேள் துலா மொண்டனு வாயுவே. 44.

தனிவிட கும்பம் மகரம் தயங்கு
யினியீசன் தன் மேல் விளங்கும் துணைமீனம்
கனியுந் தென் மேற்கு கணபதி கந்தன்
பிணை வாயு மூலைப் பெருங் கேந்திரனே. 45.

கேந்தரனீசன் கீழாங்கி துற்கையும்
சேர்ந்திடு மிந்திரன் வல்லூறு தெற்காந்தை
கோர்த்திடும் காகம் வருணன் சசி கோழி
சாற்று நடுமயில் தான் கேட்டடவிலே. 46

அடவிலே தேவர்கள் பீசமதனப்
புடையிலே சூழும் புவனைக்கும் காவலாய்
சடையிலே கங்கையைத் தாங்கிய யீசன்
வடிவிலே அக்கரம் வைத்துரைத்தானே. 47.

வைத்துரைத்தான் மதிசூடிய கூத்தனும்
ஒத்த வெழுத் தன்பத்தொன்று முடலாகச்
சத்தித் திரு மேனி சக்கரத்தின் மேனி
யத்த முதலெழுத் தாதி யகாரமே. 48.

அகாரமிரு கண்ணடு ஆகாரமே நெத்தி
இகாரம் வலக் கண் ணிடக்கண் ஈகாரம்
உகாரம் வலச்செவி ஊகார்ம் வாமமீ
றெகாரம் வலமூக்கு யீரோகாரம் வாமமே.—ஞ்ஸூ. 49.

வாங்கில் ஸுகாரம் வலக்கன்னம் மற்றிடந்
தேங்கில் ஸூ3காரம் ஏகாரமே மேலிதழ்
ஓங்காரம் மேல் வாய்ப்பல் லொக்க நிறைந்ததே. 50.

நிறைந்தது கீழ்வாய்ப்பல் நிறைந்த ஔ காரம்
உரைந்தது அ 0 அது ஒரு நாவு கூட்ட
உரைந்த அ: என்று உச்சந்தலையில்
நிறைந்ததே கண்டத்து நேர் பதினாறே. 51.

ஆரும் வலக்கைக் க:காரம் நால்ஙவ் வைந்தும்—க.று.ங
மாரும் இடக்கைக்கு ச:காரம் நால் ஞவ்வைந்தும்
— வ.ஷ.ஜ.ஙு

வேறும் வலக்கால் டகாரம் நால் ணவ்வைந்தும்
கூறுமிடக்கால் த:காரம். நவ்வைந்தும் 52.

ஐநாங் கிருபதெழுத் தானதுங் கைகால்
மெய்யாம் பகாரம் விளங்கும் வலவிலா
வெய்யாது: உ0 - மேந்து மிடவிலாப்
பொய்யாம் பகாரம் பொருந்துங் குலையதே. 53.

குலையாமல் மற்றப்பா கொண்டது கீழ்வயர்
நிலையாத மகாரம் நேர் பெரு முந்தி
உலையாத லிங்கத்தாலூன்றும் ய.காரம்
வலையாம் வகாரம் பீசத்திலிருந்ததே. 54.

இருந்த மூலாதாரத் தியங்கும் லகராம்
பொருத்தும் வகாரம் பொயக் குதத்தில்
வருந்த வலமுலை வாய்த்த சகாரம்
இருந்த சகாரம் இடமுலை தன்னிலே. 55.

தன்னுள் சகாரம் தடமார் நடு நிற்கும்
துன்னும் ஹ காரம் தொண்டைக் குழிதன்னில்
மன்னும் ள காரம் மருவுமே நெற்றியில்
உன்னும் சா வென்று உச்சி அடைந்ததே. 56.

அடைத்த வியந்திரத் தகார மதாதி
யுடுத்த வுருவத் தொழி பெற்ற சக்தி
எடுத்த அருவத் திறைவனும் நிற்பன்
அடுத்த கன்மாதிகளானதங் கெட்டே. 57.

எட்டுத்திசையும் யியல்பெறநின்றது
திஷ்டி திதியாய் சிறந்த சிங்காரமாய்
வட்டத்திருந்த வடிவுள்ள சக்கரம்
கட்டிப் பரமனுங் காட்டினன் மாதுக்கே. 58.

மாதின்தன் பேராய் வழங்கவிச் சக்கரம்
சோதியடைந்து மூல் சொல்லிய கன்மாதி

யோது முலகத்தி லொவ்வொன்று சாதிக்கும்
மாதுபுவனை மனது வைத்தாருக்கே. 59.

வைத்தோரெழுத்து வருகின்ற பீசமும்
ஒத்தாரரிய உலகில் கன்மாதிகன்
வித்தாகியுள் நிற்கும் வெவ்வேறு லக்கங்கள்
இத்தாரணி மேல் இடுபதங்கேற்றதே. 60.

**சக்கரம் அடைக்கும் விபரம் முற்றும்.**

# வசியம்

### வசிய லெக்கம்:
### லோகவசியம். ராஜ வசியம்

ஏற்ற வுலக வசியத்திடும் லக்கம்
நூற்றஞ் சறுபத்தினாலும் பதினாலும்
நூற்றஞ்சறுபத்தினாலு மிருபதும்
ஏற்றமிராசவசியத் தொழிற் கொண்டே. 61.

1. **லோக வசியம்:** 105. 64. 14= 183.
2. **ராஜ வசியம் :** 104. 64. 20= 188.

**1. லோக வசியம் : 183**

| | | | |
|---|---|---|---|
| 7 | 86½ | 1 | 88½ |
| 2 | 87½ | 8 | 85½ |
| 90½ | 3 | 84½ | 5 |
| 83½ | 6 | 89½ | 4 |

**ராஜ வசியம் : 188**

| | | | |
|---|---|---|---|
| 7 | 89 | 1 | 91 |
| 2 | 90 | 8 | 88 |
| 93 | 3 | 87 | 5 |
| 86 | 6 | 92 | 4 |

## மாதர் வசியம். புருடர் வசியம்

கொண்டது மாதர் வசியம் குவலையத்
தெண்பதினேழும் எழுபத்தன் பத்தாறும்
எண்பத்தினாலும் பதினாலும் நூற்றொன்றும்
புண்பட்டொழியும் புருடர் வசியமே. 62.

3. மாதர் வசியம்: 87. 70. 56= 213
4. புருடர் வசியம்: 84. 16. 101= 201

மாதர் வசியம் : 213.

| | | | |
|---|---|---|---|
| 7 | 101½ | 1 | 103½ |
| 2 | 102½ | 8 | 100½ |
| 105½ | 3 | 99½ | 5 |
| 98½ | 6 | 104½ | 4 |

புருடர் வசியம் : 201

| | | | |
|---|---|---|---|
| 7 | 95½ | 1 | 97½ |
| 2 | 96½ | 8 | 94½ |
| 99½ | 3 | 93½ | 5 |
| 92½ | 6 | 98½ | 4 |

## சத்துரு வசியம். மிருக வசியம்.

வசியமாஞ் சத்துரு வைத்த நூற்றஞ்சும்
இசையநாற்பத்திரண்டென்பத்தெட்டாறும்
அசையுமிருகமுமண்பத்தஞ்செண்பதும்
வசியறுபத்தாருமோது மோர் மந்திரம். 63.

5. சத்துரு வசியம்: 105. 42. 88= 235.
6. மிருக வசியம்: 55. 80. 66= 201

| சத்துரு வசியம் : 235 | | | |
|---|---|---|---|
| 7 | 112½ | 1 | 114½ |
| 2 | 113½ | 8 | 111½ |
| 116½ | 3 | 110½ | 5 |
| 109½ | 6 | 115½ | 4 |

| மிருக வசியம் : 201 | | | |
|---|---|---|---|
| 7 | 95½ | 1 | 97½ |
| 2 | 96½ | 8 | 94½ |
| 99½ | 3 | 93½ | 5 |
| 92½ | 6 | 98½ | 4 |

ஆக மொத்த லக்னம் 540. 336. 345= 1221
ஆக வசியம் 6க்கும் லெக்கப்படி சோதித்து கண்டது சரி.

**வசிய மாலாமந்திரம்.**

ஓம். ஹாறாம். அம். ஆம். கெம். ச்சம். சிவாய ஹ்ரீம் சிம். ச்சம். ஆம். ஊம் ச்சறாம். க்றோம். க்லீம். சுவாஹா.

**வசிய சாமானிய மந்திரம்.**

ஓம். வா. வா. கெணபதி. வா. வா. சர்வலோக சர்வ ஜனமே வசியமா நாய சுவாஹா.

சிகப்பு உடை, செம்பட்டுக் கை காலில் பாசாங்குசம். மலிம்பு, கரும்புவில், உடையவளாக புவனேஷ்வரீயை நினைக்கவும்.

திசை:- கிழக்கு

ஓரை:- உதித்து 1 வது ஜாமம் வியாழ லுரையில் சக்கரம் தரிக்கவும். ( இது வியாழக்கிழமை அதிகாலை துரிய உதயம் முதல் 1 மணி நேரம் நடக்கும்.)

| | | |
|---|---|---|
| வியாழன் | காலை மணி 6-00 ல் 7-00 க்குள் |
| சனி | காலை மணி 7-00 ல் 8-00 க்குள் |
| திங்கள் | காலை மணி 8-00 ல் 9-00 க்குள் |

காணுந்திருமேனி செம்மையுடை செம்பட்டும்
பூணுமலரம்பு பொற்கரும்பு விற்கை
காணுந்திசையுங் கதிரேழு பூருவம்
பேணுங்கிரிகையினிப் பேசுவோமே. 65.

பேசிய வேளை யுதித்த பின் முற்சாமம்
வீசியவோரை வியாழம தாகிடும்
ஆசை யிராஜ வசியத் தென வுங்கார
மோசையி லோக வசிய மோங் காரமே. 66.

ஓங்காரஞ் சத்ரு வோண மிருகம் பெண்புருடர்
ரீங்காரங் கூட்டியமரும் நூறாயிரந்
தேங்காம லோதத் திருந்திய தர்ப்பணம்
பாங்காய்ப்பதினாயிரமென்று பார்ப்பதே. 67.

பார்க்கும் பிராண பிரதிஷ்டையுமாயிரம்.
ஓர்க்குங் கன்மத்துக்கு ஓமமு மாயிரம்
சேர்க்குந்தியானம் செம்மை திசை கிழக்கு
பார்த்திது கீறும் படியினிச் சாற்றுமே. 68.

சாற்றிய வக்கரச் சக்கரமேனியை
யேற்றுக செம்பு பொன் எழில் பட்டு வெள்ளியில்
ஆற்றும் வசீகரமாறும் கனிந்தபின்
போற்றிய மோகனம் பேர் மாறியம்பே. 69.

வசியம் முற்றிற்று.

## மோகனம் :

இயம்பு முலோக மெழில் பெண் புருடர்
தயங்கிய சத்துரு தாங்கும் மிருகம்
அயங்கிய மோகனம் ஐந்து வகைக்கும்
செயும்படி லக்கம் தெளிந் துரைப்பேனே. 70.

## லோக மோகனம் :

உரைப்பெறு லோகாதி மோகத்திலக்கம்
நிரைப்பேனெண்பத்தெட்டு நீண்ட வெழுபதும்
உரைப்பே நூற்றொ ன்றும் ஒளிபெற்று நின்ற
புரைப்பூங்குழல் மாதர் மோகனம் போற்றே. 71.

## மோகனம் லக்கம் 5.

1. லோக மோகனம் : 88. 70. 101. : 259.

லோக மோகனம் : 259

| | | | |
|---|---|---|---|
| $127\frac{1}{2}$ | 4 | $121\frac{1}{2}$ | 6 |
| $122\frac{1}{2}$ | 5 | $128\frac{1}{2}$ | 3 |
| 8 | $123\frac{1}{2}$ | 2 | $125\frac{1}{2}$ |
| 1 | $126\frac{1}{2}$ | 7 | $124\frac{1}{2}$ |

## புருடர் மோகனம் : மாதர் மோகனம்

போற்று மையைந்து புனைந்த வைம்பத்தெட்டு
நூற்றாறுமாக நுவலும் புருடர்க்கு
நூற்றேழும் தொண்ணூறும் நொய்திருபத்தாறும்
சாற்றுயினிச் சத்துரு மோகனமே. 72.

2. மாதர் மோகனம் : 25. 58. 106. : 189.
3. புருடர் மோகனம் : 107. 90. 26. : 223.

மாதர் மோகனம் : 189

| | | | |
|---|---|---|---|
| 92½ | 4 | 86½ | 6 |
| 87½ | 5 | 93½ | 3 |
| 8 | 88½ | 2 | 90½ |
| 1 | 91½ | 7 | 89½ |

புருடர் மோகனம் : 223

| | | | |
|---|---|---|---|
| 109½ | 4 | 103½ | 6 |
| 104½ | 5 | 110½ | 3 |
| 8 | 105½ | 2 | 107½ |
| 1 | 108½ | 7 | 106½ |

## சத்துரு மோகனம் : மிருகம் மோகனம்

சத்துரு மோகனம் சாற்றுமுப்பத்திரண்
டொத்த யிருபத்து மூன்றோ றைம்பத்தெட்டாம்
வைத்த மோகனம் வரு மோகனம் நாலா
றத்த முப்பத்தஞ்சோர் நாற்பத்தெட்ட டைவே. 73.

4. சத்துரு மோகனம் : 32. 23. 58. : 113
5. மிருகம் மோகனம் : 24. 35. 48. : 107.

சததுரு மோகனம் : 113

| | | | |
|---|---|---|---|
| 54½ | 4 | 48½ | 6 |
| 49½ | 5 | 55½ | 3 |
| 8 | 50½ | 2 | 52½ |
| 1 | 53½ | 7 | 51½ |

மிருகம் மோகனம் : 107

| | | | |
|---|---|---|---|
| 51½ | 4 | 45½ | 6 |
| 46½ | 5 | 52½ | 3 |
| 8 | 47½ | 2 | 49½ |
| 1 | 50½ | 7 | 48½ |



ஆக லெக்கம் : 276. 276 339. : 891.

## மோகனம்

### மோகன மாலா மந்திரம் :

ஓம். க்லீம். ச்சம். அம். ஆம். ஹ்ரீம். சிரீம். க்றோம். க்லம். ச்சம்.ஐம்.றும்.சௌம். க்லௌம். வம்.சுவாஹா.

### சாமானிய மந்திரம் :

ஓம். நமோகாளி. நீலகாளி. வச்சுரகாளி. நிர்வாணி. மோஹே. மோஹே. அசா. மோஹே. சர்வேந்திரயாணி. சர்வமோஹிணி.நமஹா.ஓம்.

பொன் நிறம் : பொற்புடவை, கைகளில் பாசம், அங்குசம், சங்கு சக்கரம், மூன்று கண்கள் உடையவளாயும் சடையிலே மதியுமாகப் பத்மாசனத்தில் எழுந்தருளி இருக்கிறதாகத் தியானிக்கவும்.

திசை : நிருது மூலை (கன்னி மூலை.)

லுரை : உதித்து 2ம் ஜாமம் சனி ஓரையில் சக்கரம்

அய்யன் கோவில் ஆனைக் காலில் புதைக்கவும்.

வெள்ளிக் கிழமை காலை 9.00க்குமேல் 10.00க்குள்.

ஞாயிறு காலை மணி 10.00க்கு மேல் 11.00க்குள்.

அடவிலே மோகன மைந்து வகைக்கும்
புடையிலே மந்திரம் போற்றிய பின்னேச்
சடையிலே திங்களைத் தாங்கியவம்மை
வடிவிலே பொன்மை வகுக்குந்தியானமே. 74.

தியானிக்குந் திக்கு நிருதி தன் மூலை
தியானிக்கும் மந்திரம் செப்பு நூறாயிரம்
தியானிக்கும் தற்பணம் சேர் பதினாயிரம்
தியானித்து வைக்கும் திறமது தானே. 75.

திறமாடும் நேரம் தெளி ரெண்டாம் ஜாமம்
உறவாகும்

பெறுமாம் பிராணப் பிரதிஷ்டையும் பண்ணித்
திறமாக வைப்பிடம் சேர்ப்பது தானே. 76.

அதுவாந் திறமை யறானை வலக்கால்
புதையா வியந்திரம் போனது மோகனம்
விதியாக வைத்து நீ வேண்டு சிரசினில்
பதியாய்க் கருதிப் பகர் தம்பனமே. 77.

மோகனம் முற்றிற்று.

## தம்பனம் :

தம்பனம் சாற்றிற்றலஞ் சலமக்கினி
வெம்பின சுக்கிலம் வேறாயுதங் கட்குங்
கொம்பின சத்துரு கூறு மிருகமுந்
தும்பின வேழ்வகையாகத் துலங்கவே. 78.

## நிலத் தம்பனம் : மரம் காயாமல் :

துலங்கும் நிலத்தம்பனம் சொல்லும் வகைதான்
வளர்ந்த மரங்காயாமால் மந்திக்கும் நூறு
விளங்கு மெழுபது வேண்டு பத்தொன்பதுங்
களைந்து செக்கெண்ணை கருதாமலென்னே. 79.

1. மரம் காயாமல் : 100. 70. 19. 189.

மரம் காயாமல் : 189

| | | | |
|---|---|---|---|
| 89½ | 7 | 91½ | 1 |
| 90½ | 2 | 88½ | 8 |
| 3 | 93½ | 5 | 87½ |
| 6 | 86½ | 4 | 92½ |

செக்கென்னை வராமல் : ஆலையில் சாரில்லாமல் :

எண்ணுந் தொண்ணூற்றாறு மெய்து நாற்பத்தேழு
முன் னைம்பத்திரண்டு மொய்த்த விலக்கங்கள்
பன்னியே யாலைச் சாற்றில்லைப்பதினெட்டுந்
துன்னு நூற்றஞ் சொடு தொண்ணூற்று நாலென்றே. 80.

2. செக்கென்னை வராமல் : 96. 47. 52: 195.
3. ஆலையில் சாரில்லாமல் : 18. 105. 9[illegible] 217.

செக்கென்னை வராமல் : 195

| | | | |
|---|---|---|---|
| 92½ | 7 | 94½ | 1 |
| 93½ | 2 | 91½ | 8 |
| 3 | 96½ | 5 | 90½ |
| 6 | 89½ | 4 | 95½ |

ஆலையில் சாரில்லாமல் : 217

| | | | |
|---|---|---|---|
| 103½ | 7 | 105½ | 1 |
| 104½ | 2 | 102½ | 8 |
| 3 | 107½ | 5 | 101½ |
| 6 | 100½ | 4 | 106½ |

தனதானியம் காணாமல் :

என்றுந் தனதானிய மிட்டு வைத்தார்க்கும்
சென்று தொண்ணூற்றாறுஞ் சேர்ந்த பத்தொன்பதும்
அன்றிப் பதினெட்டுமாம் லெக்கநால் வகை
நின்று நிலத் தம்பனம் நேர்பட்ட மந்திரம். 81.

4. தனதானியம் காணாமல் : 96.19. 18. : 133.

தனதானியம் காணாமல் : 133

| | | | |
|---|---|---|---|
| 61½ | 7 | 63½ | 1 |
| 62½ | 2 | 60½ | 8 |
| 3 | 65½ | 5 | 59½ |
| 6 | 58½ | 4 | 64½ |

ஆக லெக்கம் 310. 241. 183. : 734.

இதற்கு மந்திரம் :

ஓம். ஸிரீங். ஹரீங். கிலீங்.காளி. ஓம். நீலகாளி. வச்சிரகாளி. நிர்வாணி.மோகினி.நில்.

பட்டஇம் மந்திரம் பாலித்த சக்கரம்
கட்டுஞ் செக்காலை கரும்பு மர்த்தடி
யொட்டுந் தனதானியம் இட்டு வைத்தார்க்கு
வெட்டுங் குழிதனில் வேண்டிப் புதைப்பதே. 82.

நிலத்தம்பனம் முற்றிற்று :

## ஜலத்தம்பனம் :
## உப்புப் படாமல் :

புதைக்கும் நிலத்தம்பனம் போக்கிய பின்னை
விதிக்கும் ஜலத்தம்பனம் வேண்டிய தெண்வகை
யொதுக்கிய வுப்புப்படா தொரு நூற்றாறு
புதுக்கின வேழஞ்சு போம் முப்பத்தெட்டுமே. 83.

1. உப்புப்படாமல் : 106. 35 38 : 179.

உப்புப் படாமல் : 179

| | | | |
|---|---|---|---|
| 84½ | 7 | 86½ | 1 |
| 85½ | 2 | 83½ | 8 |
| 3 | 88½ | 5 | 82½ |
| 6 | 81½ | 4 | 87½ |

## முத்துப்படாமை. மீன்படாமை.

எட்டிய வெண்பத்தொன் றெய்திய நூற்றெட்டும்
முட்டிய நூற்றுநால் முத்துப் படாதிடக்
கட்டு வலை மீன் படாது தொண்ணூற்றாறு
மிட்ட முப்பத்தெட்டெய்திருபத்தொன்பதே. 84.

2. முத்துப்படாமல் : 81. 108. 104. : 293.
3. மீன்படாமல் : 96. 38. 29. : 163.

முத்துப் படாமல் : 293

| | | | |
|---|---|---|---|
| 141½ | 7 | 143½ | 1 |
| 142½ | 2 | 140½ | 8 |
| 3 | 145½ | 5 | 139½ |
| 6 | 138½ | 4 | 144½ |

மீன் படாமல் : 163

| | | | |
|---|---|---|---|
| 76½ | 7 | 78½ | 1 |
| 77½ | 2 | 75½ | 8 |
| 3 | 80½ | 5 | 74½ |
| 6 | 73½ | 4 | 79½ |

குளம் உடையா. மழை பெய்யா.

ஒன்பதித்தாறும் ஒரு நூற்றஞ் செண்பதும்
பொன்பத்தாறு கரைபுரளப் போகாது
பின்புற மாமழை பெய்யா தொண்ணூற்றிரண்டு
மன்புற வைம்பத்தஞ் சாதி ரண்டாகி லே. 85.

4. ஆறுகரை புரளாமல் : 54. 105. 80. : 239.
5. மழைபெய்யாமல் : 92. 55. 12. : 159.

ஆறுகரை புரளாமல் : 239

| | | | |
|---|---|---|---|
| 114½ | 7 | 116½ | 1 |
| 115½ | 2 | 113½ | 8 |
| 3 | 118½ | 5 | 112½ |
| 6 | 111½ | 4 | 117½ |

மழை பெய்யாமல் : 159

| | | | |
|---|---|---|---|
| 74½ | 7 | 76½ | 1 |
| 75½ | 2 | 73½ | 8 |
| 3 | 78½ | 5 | 72½ |
| 6 | 71½ | 4 | 77½ |

இடிவிழாமல். கப்ப லோடாமல்.

ஆகிய எண்பது மன்பதும் நூற்றாறும்
ஏகிஇடிவிழா வென்று மரக்கலம்
போகாக் கடலில் பொருந்த வெண்பத்தஞ்சும்
பாகான நாற்பத்து நாலும் பதினாறே. 86.

6. இடிவிழாமல் : 80. 50. 106. : 236.
7. கப்பல் ஓடாமல் : 85. 45. 16. : 145.

இடி விழாமல் : 236

| | | | |
|---|---|---|---|
| ,113 | 7 | 115 | 1 |
| 114 | 2 | 112 | 8 |
| 3 | 117 | 5 | 111 |
| 6 | 110 | 4 | 116 |

கப்பல் ஓடாமல் : 145

| | | | |
|---|---|---|---|
| 67½ | 7 | 69½ | 1 |
| 68½ | 2 | 66½ | 8 |
| 3 | 71½ | 5 | 65½ |
| 6 | 64½ | 4 | 70½ |

ஆறு குள நீரலைந்துக் கரை நிற்க
கூறிய நூற்றாறுங் கொண் டெழுபத் தைந்தும்
ஏறிய வெண்பது மெய்து மிலக்கமாய்த்
தேருஞ் சிலத்தம்பம் சென்றெண்வகையதே. 87.

8. ஆறு,குளம்,கரை
புரளாமல் : 106. 75. 80. : 261.

ஆறு, குளம், கரை புரளாமல் : 261

| | | | |
|---|---|---|---|
| 125½ | 7 | 127½ | 1 |
| 126½ | 2 | 124½ | 8 |
| 3 | 129½ | 5 | 123½ |
| 6 | 122½ | 4 | 128½ |

ஆகலெக்கம் 700. 504. 465. : 1675.

வகையொன்றி நின்ற வகுத்த ஜலத்தில்
தகை யொன்றி நின்ற வத்தம்பனம் சாற்றில்ப்
பகையன்றி நின்ற பதினாரரையிற்
தொகையென்று நின்ற தோர் மந்திரம் சொல்வதே 88.

இதற்கு மந்திரம் :

ஓம். அய்யுங். கிலீங். பகவதே. சர்வேந்திரியாணி. ஹரீம். ஸீரீம்.ஆம். குரோம். க்ஷ௦. . தம். ஓம். சுவாஹா.

சொல்லிய மந்திரம் தோன்ற வரைந்தபின்
நல்லிய வேந்திரம் நாடியே வைப்பிடம்
புல்லும் வகையிலே மீனும் படா தொழிற்
செல்லுந் துறையிலே செரிந்துப்பு முத்துக்கே. 89.

முத்துச் சொரி மழை முட்டையனானைக்கால்
யெத்துங் குள நடுவே கரை யாற்றுக்கு
வைத்தங் குறுத்து மரக்கல மாமுடியி
யாத்துமிடி சிரத்தினி லேந்திரம். 90.

யேந்திரம் தன்னை எழில் பெறவைத்துப்
பயன் கொள்வதென்று பரமனும் சொன்னார்

தயங்கிய சுக்கிலத் தம்பனந் தன்னை
யியம்பு வனந் தட்டிலக்கத்தடையவே. 91.

உப்புக்கும், முத்துக்கும் துறையில் புதைக்கவும். மீனுக்கு வலையில் கட்டவும். ஆற்றுக்கு கரையில் புதைக்கவும். மழைக்கு அய்யன் கோவிலில் புதைக்கவும். இடிக்கு சிரசில் தரிக்கவும். மரக்கலத் துக்கு முடியில் கட்டவும். ஆறு,குளம், கரைக்கு நடுவில் புதைக்கவும்.

ஜலத்தம்பனம் முற்றிற்று.

சுக்கிலத் தம்பனம் : 5.

கெர்பந் தரிக்க :

அடைந்தது சுக்கில மன்பத்துநாலும்
துடர்ந்த அறுபதும் தொண்ணூற்று மூன்றும்
விடைந்ததுகை கற்பம் விழாது தரிக்க
நடந்த திருபத்தேழ் நாலெட்டு நாற்பதே. 92.

1. சுக்கிலம் கட்ட : 54. 60. 93. : 207.
2. கர்பம் தரிக்க : 27. 32. 40. : 99.

சுக்கிலம் கட்ட : 207

| | | | |
|---|---|---|---|
| 98½ | 7 | 100½ | 1 |
| 99½ | 2 | 97½ | 8 |
| 3 | 102½ | 5 | 96½ |
| 6 | 95½ | 4 | 101½ |

கற்பம் தரிக்க : 99

| | | | |
|---|---|---|---|
| 44½ | 7 | 46½ | 1 |
| 45½ | 2 | 43½ | 8 |
| 3 | 48½ | 5 | 42½ |
| 6 | 41½ | 4 | 47½ |

பிள்ளைமரியாமல். திரளாத பெண்ணுக்கு :

நாற்பது நாற்பத்திரண் டெழுபத் தேழும்
போற்றிடும் பிள்ளைப்பிறந்து மரியாமல்
ஏற்பது தொண்ணூறுமெண்பதும் பன்னேழும்
சேர்ப்பது மாதர் திரளாதிருக்கவே. 93.

3. பிள்ளைபிறந்து மரியாமல் 40. 42. 77. : 159.
4. மாதர் திரளாதிருக்க : 90. 80. 87. : 187.

பிள்ளை பிறந்து மரியாமல் : 159

| | | | |
|---|---|---|---|
| 74½ | 7 | 76½ | 1 |
| 75½ | 2 | 73½ | 8 |
| 3 | 78½ | 5 | 72½ |
| 6 | 71½ | 4 | 77½ |

மாதர் திரளாதிருகக : 187

| | | | |
|---|---|---|---|
| 88½ | 7 | 90½ | 1 |
| 89½ | 2 | 87½ | 8 |
| 3 | 92½ | 5 | 86½ |
| 6 | 85½ | 4 | 91½ |

முலை யிலாமல் :

இருக்குமுலை எழா வென்றே யறுபதும்
இருக்கு மெழுபதோ டெண்பத்துயேழும்
சுருக்கு முறை வைத்துச் சுக்கிலத் தம்பனம்
நிறைக்கு மொரு மந்திரம் நீயறியவே. 94.

5. முலை எழாமல் 60. 70. 87. : 217.

முலை எளாமல் : 217

| | | | |
|---|---|---|---|
| 103½ | 7 | 105½ | 1 |
| 104½ | 2 | 102½ | 8 |
| 3 | 107½ | 5 | 101½ |
| 6 | 100½ | 4 | 106½ |

ஆகலெக்கம். 271. 284. 314. : 869.

## இதற்கு மந்திரம்!.

ஓம். ஐயும். கிலீம். க்ஷம். சிறீம். கிறீம். பம். கம். ஆம். க்ஷாம். சிவாய. ஹிரீம். ஸிறீம். யம். டம்.ஸுவாஹா.

அறிந்த வியந்திர மாக்கு மடைவுஞ்
செரிந்த சிரமது சேர்ந்த முற்பக்கம்
பிரிந்தது சுக்கிலம் பெற்றிளைப்பார்க்கு
நிறைந்த வக்கெற்பம் நிருத்தித் தரிப்பதே. 95.

தரிப்பது மாசாத் தானாணையிடக் கால்
பெருக்க முலையெழாப் பெண் திரளாமல்
பொருத்த முறு நாளில் பூசை பலிசெய்ய
செரிச்செய்யு மைங்காயம் சேர்த்துப் புதைப்பதே. 96.

சுக்கிலத் தம்பனம் முற்றிற்று.

## அக்கினித் தம்பனம் :
### மழுவேந்த

புதைக்கின்ற சுக்கிலத் தம்பனம் போனபின்
விதிக்கின்ற லக்கம் மழுவேந்த தொண்ணூறும்
பதிக்கும் பதினெட்டும் பார முப்பத் தொன்றுங்
கொதிக்கு முலையில் உருகா திரும்பே. 97.

அக்கினி
இல்

1. மழுவேந்த :. 90. 18. 31: 139

மழுவேந்த : 139

| | | | |
|---|---|---|---|
| 64½ | 7 | 66½ | 1 |
| 65½ | 2 | 63½ | 8 |
| 3 | 68½ | 5 | 62½ |
| 6 | 61½ | 4 | 67½ |

## இரும்பு வேகாது. மனை வேகாது.

இரும்பு வேகாதே யிடு முப்பத்தாறும்
பொருத்தவொண்ணாரும் புகல நாற்பத்தைந்தும்
வருந்திய முப்பதும் மன்னு நூற்றொன்றும்
செரிந்த தொண்ணூற்றாறும் சேர்மனைவேகா. 98.

2. இரும்பு வேகாமல் :. 36. 48. 45: 129
3. வீடு வேகாமல் :. 30. 101. 96: 227

இரும்பு வேகாமல் : 129

| | | | |
|---|---|---|---|
| 59½ | 7 | 61½ | 1 |
| 60½ | 2 | 58½ | 8 |
| 3 | 63½ | 5 | 57½ |
| 6 | 56½ | 4 | 62½ |

வீடு வேகாமல் : 227

| | | | |
|---|---|---|---|
| 108½ | 7 | 110½ | 1 |
| 109½ | 2 | 107½ | 8 |
| 3 | 112½ | 5 | 106½ |
| 6 | 105½ | 4 | 111½ |

ஆக லெக்கம் 156. 167. 172. 495

வேகாம லக்கினி தம்பிக்க வேண்டும்
சோகா வகை மூன்றும் சொற்படி சாதிக்கும்
பாகாமறை பதினாறிற் பதிப்பது
போகா மந்திரம் போற்றி யிடுவதே. 99.

இதற்கு மந்திரம் :

ஓம். ஐயுங். கிலீங். ச்சமி. பம். பகவதே. சிரீம். ச்க்ஷம். பம். க்ரோங். ஷம். ஹ்ரீம். ச்சாம். கம். க்ஷம். வம். சுவாஹா.

சுக்கிலத்துக்கும்.கெற்பந் தரிக்கிறதற்கும். பிள்ளை பெற்றிடப் பார்க்கும் சிரத்தில் தரிக்கவும். தெருளா திருக்கவும். முலை எழாமல் இருக்கவும் அய்யன் கோவில் யானை இடக்காலில் பூசை பலி செய்து சக்கரத்தில் ஐங்காயம் பூசிப் புதைக்கவும்.மழுக்கு கையில் பிடிக்க. உலைக்கு வலையில் புதைக்கவும். வீடுக்கு கூரையில்சொருகிவைக்கவும்.

இடுவது யந்திரம் மெவ்விடம் வைக்கத்
தொடுவது கையில் சுடர் மழுவேந்த
விடுவது வேகா திரும்பை யுலையில்
அடுவது வீட்டினிலாக்கி வைப்பாமே. 100.

## அக்கினித் தம்பனம் முற்றிற்று.

## ஆயுதத் தம்பனம். 5
## வெட்டறாமல்

வைப்பாக அக்கினித் தம்பனம் வகுத்தார்
தப்பாமலாயுதத் தம்பனம் செப்பக்கேள்
அப்போது வெட்டறா தறுபத்தாறு
முப்பத்து மூன்று முதலிருபத்து நான்கே. 101.

1. வெட்டறாமல்: 66. 33. 24. : 123

வெட்டறாமல் : 123

| | | | |
|---|---|---|---|
| 56½ | 7 | 58½ | 1 |
| 57½ | 2 | 55½ | 8 |
| 3 | 60½ | 5 | 54½ |
| 6 | 53½ | 4 | 59½ |

## குத்து தையாமல்: அம்பு தையாமல்:

நாங் கெட்டு முப்பதும் நல்ல பதினஞ்சும்
ஊன்பட் டெலும்பில் உரையாது குத்தெலாம்
தான்பட்ட அம்புகள் தையாத றுபத்தஞ்சும்
சூன்பட் டிருபதும் சொல் லன்பத் தொன்றுமே. 102.

2. குத்து தையாமல்: 32. 30. 15. : 77



3. அம்பு தையாமல்: 65. 20. 51. : 136

குத்து தையாமல் : 77

| | | | |
|---|---|---|---|
| 33½ | 7 | 35½ | 1 |
| 34½ | 2 | 32½ | 8 |
| 3 | 37½ | 5 | 31½ |
| 6 | 30½ | 4 | 36½ |

அம்பு தையாமல் : 136

| | | | |
|---|---|---|---|
| 63 | 7 | 65 | 1 |
| 64 | 2 | 62 | 8 |
| 3 | 67 | 5 | 61 |
| 6 | 60 | 4 | 66 |

**மரம் வெட்டாமல்: கிடாய் வெட்டாமல்:**

ஒன்று மரம் வெட்டறா வோங் கெழுபத்தாறும்
சென்ற விருபதும் சேர்ந்த இருபத்தாறும்
நன்றியன்பத் தேழும் நாற்பத்தி ரெண்டுமாய்
நின்ற வெழுபதும் நெருங்கிடாய் வெட்டே. 103.

4. மரம் வெட்டாமல்: 76. 20. 26. : 122
5. கிடாய் வெட்டாமல்: 57. 42. 70. : 169

மரம் வெட்டாமல் : 122

| | | | |
|---|---|---|---|
| 56 | 7 | 58 | 1 |
| 57 | 2 | 55 | 8 |
| 3 | 60 | 5 | 54 |
| 6 | 53 | 4 | 59 |

கிடாய் வெட்டாமல் : 169

| | | | |
|---|---|---|---|
| 79½ | 7 | 81½ | 1 |
| 80½ | 2 | 78½ | 8 |
| 3 | 83½ | 5 | 77½ |
| 6 | 76½ | 4 | 82½ |

ஆகவெல்லக்கம் : 296 145 186 627

வெட்டுக் கிடாயுடன் வேறாயுதத் தம்பனம்
பட்டதுபாரில் பரிந்த வகையஞ்சா
மிட்ட விலக்க மெழில் பெற நின்றபின்
கட்டிய மந்திரம் காண்பதரையிலே. 104.

இதற்கு மந்திரம்:

ஓம். ஐயுங். கிலீங். சர்வயிந்திராணி. ஹ்ரீம். சிறீங். ஹிறீங். சம். ஹறீம். தம். தம். க்ஷம். க்ஷம். ஓம். ஸ்வாஹா.

அரைதனில் மந்திர மாக்கிய பின்னை
யிரைதனை வைக்கு மிருப்பிடஞ் சொல்லில்
நிறையாங் கிடாய் வெட்டு நோம்பு குங்
வெறிபடக்கையிற் பிடி கிடாய் வெட்டே. 105.

கிடாயது மாளுங் கிளர்ந்து கைவெட்டுப்
படாது தத்தலத்தில் பதித்துடன் தாவி
யடா தந்த வாயுத்தம்பம் அவை பொய்ப்
படா நின்ற சத்துருத் தம்பனம் பாடே. 106.

ஆயுதத் தம்பனம் முற்றிற்று.

சத்துரு தம்பனம். 11

பகைவர் நாவடங்க:

பாடுவதேது பகை நாவடங்கத்
தேடிய வைம்பதுஞ் சேர்ந்த வைம்பத் தெட்டுங்
கூடிய வைம்பத்தேழ்க் கொண்டவிலக்கம்
ஓடிக் குரோத மடங்க வுறுவதே. 107.



1. பகைவர் நாவடங்க: 50. 58. 57. : 165.

பகைவர் நாவடங்க : 105

| | | | |
|---|---|---|---|
| 47½ | 7 | 49½ | 1 |
| 48½ | 2 | 46½ | 8 |
| 3 | 51½ | 5 | 45½ |
| 6 | 44½ | 4 | 50½ |

குரோதமடங்க : கால் முறிய :

உறுவது நூற்றி யிரண்டோர் பதினேழுஞ்
சொரிவது முப்பத்திரெண்டுஞ் செல்பாத
முரிவது முன்னம் நடவாதிருக்க
அறுபது நாலாறு மன்பத்தஞ்சாகுமே. 108.

2. குரோதமடங்க: 102. 17. 32. : 151.
3. கால்முறிய: முடங்க 60. 24. 55. : 139.

குரோதம் அடங்க : 151

| | | | |
|---|---|---|---|
| 70½ | 7 | 72½ | 1 |
| 71½ | 2 | 69½ | 8 |
| 3 | 74½ | 5 | 68½ |
| 6 | 67½ | 4 | 73½ |

முடங்க
கால்முறிய : 139

| | | | |
|---|---|---|---|
| 64½ | 7 | 66½ | 1 |
| 65½ | 2 | 63½ | 8 |
| 3 | 68½ | 5 | 62½ |
| 6 | 61½ | 4 | 67½ |

சத்ரு ஆயுதந் தையாமல் : எழுதகை வராமல்

அஞ்சவே சத்துரு ஆயுதம் தையாமல்
அஞ்சாறு நாற்பத்து ஏழுபத்திரண்

டுஞ்சா தெழு தக்கை குறையவாறாறுட
னஞ்சே நாற்பத்தேழு நாடு மெழுபதே. 109.

4. சத்ரு ஆயுதந் தையாமல் :30. 47. 62. : 139.
5. எழுதகை வராமல் : 36. 47. 70. : 153.

ஆயுதந் தையாமல் : 139

| | | | |
|---|---|---|---|
| 64½ | 7 | 66½ | 1 |
| 65½ | 2 | 63½ | 8 |
| 3 | 68½ | 5 | 62½ |
| 6 | 61½ | 4 | 67½ |

எழுதகை வராமல் : 153

| | | | |
|---|---|---|---|
| 71½ | 7 | 73½ | 1 |
| 72½ | 2 | 70½ | 8 |
| 3 | 75½ | 5 | 69½ |
| 6 | 68½ | 4 | 74½ |

பாடாமல் : சபைக் கூத்தாடமல்

எழுபது முப்பத்தஞ் செண்ணுங்கிடாமுறப்
பழுதறு பாட்டு மிடறுகள் தம்பிக்கும்
எழுபத்தஞ் செண்பதிருபத்தி னாலுங்
குழுவது கூத்துங் குறுகு முடனே. 110.

6. பாடாமல் : 70. 35. 32. : 137.
7. சபைக் கூத்தாடமல் : 75. 80. 24. : 179.

பாடாமல் : 137

| | | | |
|---|---|---|---|
| 63½ | 7 | 65½ | 1 |
| 64½ | 2 | 62½ | 8 |
| 3 | 67½ | 5 | 61½ |
| 6 | 60½ | 4 | 66½ |

சபைக் கூத்தாடாமல் : 179

| | | | |
|---|---|---|---|
| 84½ | 7 | 86½ | 1 |
| 85½ | 2 | 83½ | 8 |
| 3 | 88½ | 5 | 82½ |
| 6 | 81½ | 4 | 87½ |

சரக்கு வில்லாமல் : தச்சுப் பணி செய்யாமல்

உடனைம்பத் தெட்டாகு மோ ரெழுபத் தொன்றுந்
தடை முப்பத் தாறுஞ் சரக்கு விப்போருக்குப்
படைத் தச்சற் பண்ணுள் பதினேழுடனே
யிடை நின்றிருபத் தாறெய்தும் நூற்றாறே. 111.

8. சரக்கு வில்லாமல் : 58. 71. 36. : 165.
9. தச்சுப் பணி செய்யாமல் : 17. 26. 106. : 149.

சரக்கு வில்லாமல் : 165

| | | | |
|---|---|---|---|
| 77½ | 7 | 79½ | 1 |
| 78½ | 2 | 76½ | 8 |
| 3 | 81½ | 5 | 75½ |
| 6 | 74½ | 4 | 80½ |

தச்சுப்பணி செய்யாமல் : 149

| | | | |
|---|---|---|---|
| 69½ | 7 | 71½ | 1 |
| 70½ | 2 | 68½ | 8 |
| 3 | 73½ | 5 | 67½ |
| 6 | 66½ | 4 | 72½ |

சித்திரம் வரையாமல் : குசவர் பானை செய்யாமல்

நூற்றாறு முப்பத்து நாலும் பதினேழும்
கூற்றாகச் சித்திரங் கொட்டங் கைவராமல்
தேற்றா தெழுபத்தஞ் செண்பத்தாறெட்டுங்
கூற்றார் குசவர் மனையார் க ளோர் கலம். 112.

10. சித்திரம் வரையாமல் : 106. 34. 17. : 157.
11. குசவர் பானை செய்யாமல் 75. 86. 64. : 225.

35 திருமூலர்

குருபவர்

சித்திரம் வரையாமல் : 157

| | | | |
|---|---|---|---|
| 73½ | 7 | 75½ | 1 |
| 74½ | 2 | 72½ | 8 |
| 3 | 77½ | 5 | 71½ |
| 6 | 70½ | 4 | 76½ |

குசவர் பானை செய்யாமல் : 225

| | | | |
|---|---|---|---|
| 107½ | 7 | 109½ | 1 |
| 108½ | 2 | 106½ | 8 |
| 3 | 111½ | 5 | 105½ |
| 6 | 104½ | 4 | 110½ |

ஆக லெக்கம் 679. 525. 555. 1759

## இதற்கு மந்திரம்

ஓம். அய்யும். கிலீம். சௌவும். சர்வேந்திராயிணி. அம். சம்ளம். ஹிரீம். சிரீம். ஆம். குறோம் ஷம். தம். ஸ்வாஹா.

வெட்டுகுத்து,அம்புக்கு கையில் பிடிக்கவும், மரத்தடியிலும்,கிடாய் வெட்டுகிற இடத்திலும் புதைக்கவும். பலிபீடம்

பகைக்கும், குரோத மிரண்டுக்கும் சிரத்தில் தரிக்கவும். நடை,ஆயுதம் ஆனை இடக்காலில் புதைக்கவும். எழுதாமல், பாடாமல் அந்தந்த இடங்களில் புதைக்கவும்.

கலமாய் சத்துரு தம்பனத்திற் கண்ட
பலமாம் வகையும் பதினொன்றேயாகும்
வலமாகக் கொண்ட வரைபதினாறில்
நலமாக மந்திரம் நாட்டு வதொன்றே.

நாட்டிய தொன்றை நடுப் பேர் வைத்தபின்
ஈட்டியவாக்குக் குரோதஞ் சிரத்தினில்
காட்டிய கால் கை ஆயுத மொழியத்
தீட்டுவதைய் யனிடக் காலில் வைக்கவே. 114.

வைக்கவே பட்டாடை வாழ் குசவர் தச்சர்க்கு
விற்குஞ் சரக்குக்கு வேண்டும் கடைதனில்
ஏக்கு மிசை பாட்டெழுதார் கூத்தாடார்
சிக்கெனக் கையினிற் சேர்த்துப் பிடிக்கவே. 115.

**சத்துருத்தம்பனம் முற்றிற்று.**

**மிருகத் தம்பனம். 10**

**புலி, கடுவாய் வாய்கட்ட :**

பிடிக்கு மிருகங்கள் பேர்க்கு மாரம்பங்
கொடுக்கும் வகைதான் கூறுமிலக்கம்
எடுக்கும் புலிவாய்க் கிருபத்தொன்பதே
ழடுத்திடும் பத்திரண்டாகு மிலக்கமே. 116.

**1. புலி,கடுவாய் வாய் கட்ட : 20. 87. 22. : 129.**

**புலி, கடுவாய் வாய்கட்ட : 129**

| | | | |
|---|---|---|---|
| 59½ | 7 | 61½ | 1 |
| 60½ | 2 | 58½ | 8 |
| 3 | 63½ | 5 | 57½ |
| 6 | 56½ | 4 | 62½ |

யானை எதிராமல் : எலிவாய் கட்ட :

இலக்கிய வானை யெதர்வராதோடத்
துலங்குந் தொண்ணூற்றஞ் சும் தோன்றிய வெண்பதும்
நிலைக்காய் நூற்றாறும் நீண்டெலிவாய் காவில்
துலைக்கு மிருபதும் தொண்ணூற்றேழஞ்சே. 117.

2. யானை எதிராமல் : 95. 80. 106. : 281.
3. எலி வாய் கட்ட : 20. 90. 35. : 145.

யானை எதிராமல் : 281

| | | | |
|---|---|---|---|
| 135½ | 7 | 137½ | 1 |
| 136½ | 2 | 134½ | 8 |
| 3 | 139½ | 5 | 133½ |
| 6 | 132½ | 4 | 138½ |

எலிவாய் கட்ட : 145

| | | | |
|---|---|---|---|
| 67½ | 7 | 69½ | 1 |
| 68½ | 2 | 66½ | 8 |
| 3 | 71½ | 5 | 65½ |
| 6 | 64½ | 4 | 70½ |

கிடாய் வராமல் பாயாமல்: பாம்பு கடியாமல் :

ஏழஞ்சறுபத்திரண்டு முப்பத்தெட்டுஞ்
சூழுங்கிடாய்கள் தொடர்ந் தோடிப்பாயாமல்
ஏழே முமைம்ப திருபத்து நாலுக்கும்
பேழவாயாம் பாம்பு கடியா பின்னாடாதே. 118.

4. கிடாய் வராமல் பாயாமல்:35. 62. 38. : 135.
5. பாம்பு கடியாமல் : 49. 50. 24. : 123.

கிடாய் பாயாமல் : 135

| | | | |
|---|---|---|---|
| 62½ | 7 | 64½ | 1 |
| 63½ | 2 | 61½ | 8 |
| 3 | 66½ | 5 | 60½ |
| 6 | 59½ | 4 | 65½ |

பாம்பு கடியாமல் : 123

| | | | |
|---|---|---|---|
| 56½ | 7 | 58½ | 1 |
| 57½ | 2 | 55½ | 8 |
| 3 | 60½ | 5 | 54½ |
| 6 | 53½ | 4 | 59½ |

**நரிவாய் கட்ட: நாய் வாய் கட்ட:**

ஆடா நரிவாய்க் கமைந்த வைம்பத் தஞ்சும்
பீடா இருபத் திரண்டெண்பத்தெட்டாகும்
நாடா பதினஞ் சிறுபத்து நாலாறும்
கூடாது நாய்வாய் குறுகாது தான்பறி. 119.

6. நரிவாய் கட்ட : 55. 22. 88. : 165.
7. நாய் வாய் கட்ட : 15. 20. 24. : 59.

நரிவாய் கட்ட : 165

| | | | |
|---|---|---|---|
| 77½ | 7 | 79½ | 1 |
| 78½ | 2 | 76½ | 8 |
| 3 | 81½ | 5 | 75½ |
| 6 | 74½ | 4 | 80½ |

நாய் வாய் கட்ட : 59

| | | | |
|---|---|---|---|
| 24½ | 7 | 26½ | 1 |
| 25½ | 2 | 23½ | 8 |
| 3 | 28½ | 5 | 22½ |
| 6 | 21½ | 4 | 27½ |

குதிரை ஓடாமல்: எருதும், பசுவும் எதிறாமல்

பரிகேழு மோடா பதினே ழுடனே
தெரிவது நாற்பதும் சேர்ந் தறுபத்தெட்டு
மெருதும் பசுவு மெதிறா திருக்க
உருவு மெழுபதும் நூற்றொன்றுநாற்பதே. 120.

8. குதிரை ஓடாமல் : 17. 40. 68. : 125.
9. எருதும்,பசுவும் எதிறாமல்70. 101. 40. : 211.

குதிரை ஓடாமல் : 125

| | | | |
|---|---|---|---|
| 57½ | 7 | 59½ | 1 |
| 58½ | 2 | 56½ | 8 |
| 3 | 61½ | 5 | 55½ |
| 6 | 54½ | 4 | 60½ |

எருதும், பசுவும் எதிறாமல் : 21

| | | | |
|---|---|---|---|
| 100½ | 7 | 102½ | 1 |
| 101½ | 2 | 99½ | 8 |
| 3 | 104½ | 5 | 98½ |
| 6 | 97½ | 4 | 103½ |

பன்றிவாய் கட்ட :

நாற்பத்து நாலும் நணுகிய வெண்பதும்
பாற்பதி னேழும் பன்றிவாய் தான் காவல்
ஏற்கும் பத்திற்கு மெழில் மிருகத் தம்பம்
வேற்பதாம் மந்திரம் பேராக வெண்ணிடே. 121.

10. பன்றிவாய் கட்ட : 44. 80. 17. : 141.

பன்றிவாய் கட்ட : 141

| | | | |
|---|---|---|---|
| 65½ | 7 | 67½ | 1 |
| 66½ | 2 | 64½ | 8 |
| 3 | 69½ | 5 | 63½ |
| 6 | 62½ | 4 | 68½ |

ஆக லெக்கம் 420. 632. 462. = 1514

**இதற்கு மாலா மந்திரம் :**

ஓம். ஐம். சிரீம். ஹிரீம். க்லீம். சௌம். ச்சாரம். ச்சம் ஆம். ஹிரீம். தம். தம். ச்சய. ச்சய. தள தள. கொண. கொண. ஐம். சுவாஹா.

புலி, பன்றியானை, கிடாய், அரவம் ஆகிய 5க்கும் சிரத்தில் தரிக்கவும். மற்ற 5க்கும் தலங்களில் – தைக்கவும்.

இந்த தம்பன வகை 7க்கும்
திசை : வருணன். (மேற்கு)

தியானம் : பச்சைநிறம், பச்சை பட்டுப் புடவையும், கைகளில் பாசங்குசம், சங்கு, சக்கரம், மூன்று நயனமும், சடையில் மதியுமாகப் பத்மாசனத்தில் எழுந்தருளி இருக்கிறதாகத் தியானிக்கவும்.

ஓரை : உதித்து ஓம் சாமம் சனி ஓரையில் சக்கரம் தரிக்க:

(இது ஞாயிற்றுக் கிழமை காலை மணி 10.00க்கு மேல் 11.00க்குள் ஆகும்.)
செவ்வாய் பகல் மணி 11.00க்கு மேல் 12.00க்குள்
வியாழன் பகல் மணி 12.00க்கு மேல் 1.00-க்குள்

### சாமானியமந்திரம்.

ஓம் நமோ காளி. நீல காளி. வச்ரகாளி. நிர்வாணி. சர்வேந்திரயாணி. ஸர்வதம்பன நம நம :

எண்ணிய மந்திரம் இட்ட பின் சக்கரம்
பண்ணிப் பதிக்கும் படியறி விப்பனான்
எண்ணிய புலிபன்றி யானை யெழில் கிடாய்
திண்ணின்ற பாம்பு சிரசிற் றரிப்பதே. 122.

தரிக்கும் புனங்களில் தன்னாலு மூலைக்கும்
நரிக்கும் எலிக்கும் நடுவே அங்காகும்
பரிக்கும் பாம்பாடா பரியானை யோடா
பெருத்த விச்சக்கரம் பின்மந்திரம் கொள்ளே. 123.

கொள்ளு மிம் மந்திரம் கொட்டிய தம்பனம்
ஒள்ளிய ஏழிற்கோர் பிறப்பதனிற்
றள்ளியுள் நின்று தயங்கும் தியானமும்
உள்ளம் பெற்றங்கே ஒளி பெறுமாறே. 124.

ஒளி பெற்ற சத்தியினோவிய பச்சை
தெளிவது மேற்கென்று தாக்கது தன்னைக்
களிபெரு நேரமும் காலமூன்றாஞ் சாமம்
ஒளிபெரு மோரையும் மோரை சனியாமே. 125.

சனியாகு மோரை சமைந்த இம்மந்திரம்
இனிதாக வெண்ணு முறை எண்ணி நூறாயிரம்
புனைமண்டல தர்ப்பணம் போம் பதினாயிரம்
நினையும் பிரதிஷ்டயும் நீகருதாயே. 126.

கருத வல்லார்க்கு கலந்தெங்கும் நிற்கும்
பெருகிய வன் பொடு பேணி யளிக்குந்
திருவுருவாகித் திகழு மொற்றாடவே
ஒரு பொருளாக வுணர் திக்கு நோக்கிலே. 127.

நோக்கிய தம்பனம் நூலெழு வகை
தாக்குந்துகை யேற்றும் தா நாற்பத் தேழ்வகை
நீக்கிய பின்னே நிறைந்த வுச்சாடினம்
ஆக்கியதவ்வழி யாரறிவாரே. 128.

தம்பனம் முற்றிற்று : .

தெய்வ உச்சாடினம் : . 6

வாரு முச்சாடினம் வந்த வகைசொல்லத்
தேரும் பெயர்த் தெய்வ மிராசா வியாதியும்
ஓருமுலோக மொரு பெண் புருடரும்
சாரும் சல மிருகம் சத்துரு எண்வகையே. 129.

எண் வகையாக இயம்பு முச்சாடினம்
பண்ணுற நின்றபடி யிலக்கத்தை
மண்ணுற வேத்தி வகுக்குந் தியானமும்
துண் ணென்ற தெய்வ வுச்சாடினஞ் சொல்வதே. 130.

அய்யன் போக : பிடாரி போக :

சொல்லும் மைம்பத் தொன்றுஞ் சேர்ந்த பதினாறும்
அல்ல வோரைம்பதும் ஆயிடினய்யன் போம்
நல்லபிடாரி போம் நாடு மறுபதும்
சொல்லைம்பத் தேழும் தொடர்ந்த வெழுபதே. 131.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. அய்யன் போக. | 51. | 16. | 50 | : 117. |
| 2. பிடாரி போக. | 60. | 57. | 70. | : 187. |

அய்யன் போக : 117

| | | | |
|---|---|---|---|
| 4 | 56½ | 6 | 50½ |
| 5 | 51½ | 3 | 57½ |
| 52½ | 8 | 54½ | 2 |
| 55½ | 1 | 53½ | 7 |

பிடாரி போக : 187

| | | | |
|---|---|---|---|
| 4 | 91½ | 6 | 85½ |
| 5 | 86½ | 3 | 92½ |
| 87½ | 8 | 89½ | 2 |
| 90½ | 1 | 88½ | 7 |

பிரமகத்தி போக: முயல்கன் போக :

எழுபத்தெட் டெண்பத்தெட் டெய்தும் நூற்றாறுந்
தழுவிப் பரந்து போம் தான் பிரம்ம கத்தி
யெழுமேயிருபது மேலேழும் மெண்பான்
முழுதற்றுப் போகுமுயலகன் றானே. 132.

3. பிரமகத்தி போக. 78. 87. 106. : 271.
4. முயல்கன் போக. 20. 49. 80. : 149.

பிராகத்தி போக : 271

| | | | |
|---|---|---|---|
| 4 | 133½ | 6 | 127½ |
| 5 | 128½ | 3 | 134½ |
| 129½ | 8 | 131½ | 2 |
| 132½ | 1 | 130½ | 7 |

முயலகன் போக : 149

| | | | |
|---|---|---|---|
| 4 | 72½ | 6 | 66½ |
| 5 | 67½ | 3 | 73½ |
| 68½ | 8 | 70½ | 2 |
| 71½ | 1 | 69½ | 7 |

